# ஆரோக்கிய மலர்

## மாதாந்திர மருத்துவ இதழ்






ஆசிரியர் & வெளியிடுபவர்:
Dr.K.வன்னியராஜ், R.I.M.P.(M.D.H.)
மதுரை-1.

# ஆரோக்கிய மலர்

## மாதாந்திர மருத்துவ இதழ்

### நோக்கம்

இப்பத்திரிகையின் முக்கிய நோக்கம் என்னவென்றல் உலக மக்களின் நல்வாழ்வுக்காக சுகாதாரத் தத்துவம், நோயின்றி வாழும் வகை, நோய் வந்தபின் செய்யவேண்டிய சிகிச்சை முறைகள் நோய் தடுத்தல் முறைகள் முதலியவைகளைப் பற்றி அலோபதி, ஹோமியோபதி, ஆயுர்வேதம், சித்தா, யூனுனி போன்ற வைத்திய முறைகளில் உள்ள சிறப்புத்தன்மை பற்றி கட்டுரைகள், கருத்துக் கள், அனுபவ முறைகள் மற்றும் பிற கட்டுரைகள் வெளியிடுவது இதன் நோக்கமாகும். எந்த ஒரு தனிப்பட்ட வைத்திய முறையை மட்டும் தழுவியது அல்ல. ஆகையால் சகல வைத்திய முறைகளில் உள்ள டாக்டர்கள், வைத்திய மேதைகள், பொதுமக்கள் யாவரும் ஆதரிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

N.B : ஆரோக்கிய மலர் சந்தாதார்கள் அனைவருக்கும் தெரிவிப்பது என்னவென்றல் — மருத்துவ சம்பந்தமாக கேள்விகள் கேட்கும் உரிமையை பயன்படுத்தும்படி கேட்டுக்கொள்கிறோம்.

சந்தா பாக்கி உடையவர்கள் உடனடியாக சத்தா துகையை செலுத்தும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ஆசிரியர் & பதிப்பாளர்

**Dr. K. வன்னியராஜ்**

தனிப்பிரதி **Rs. 1—00** வருட சந்தா **Rs. 10—00**

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆரோக்கிய மலர்**

Regd at News Paper in No. TN/MA(C)/76

16, சம்பந்தமூர்த்தி தெரு, **மதுரை-1.**

இதழ் : **5**

தேதி : **15-10-1980**

## பொருளடக்கம்



---



# கேள்வி-பதில்



விடை அளிப்பவர்கள்
திருமதி. Dr. R. ஹேமாவதி
M. Rajam, R. H. M. P., அவர்கள்

Dr. M. Rajam, R.H.M.P. Dr. R. ஹேமாவதி, R.H.M.P.

1. **சுகாதாரம் என்ருல் என்ன?**

மனித இனம் சுகமாக, சுகவாழ்வு வாழ்வதற்கு சுகத்திற்கு ஆதாரமாய் உடைய, கோட்பாடு ஆரோக்கிய (விதிகளைப்பற்றி) விவரிக்கும் (போதிக்கும் முறைகளே) சுகாதாரம் என்று பொருள் படைத்ததாயிற்று.

2. **ஆரோக்கிய விதிகள் எத்தனே? பத்து வகைப்படும் அவைகளைக் கீழே காண்க.**

(a) உடலுக்கு சரியாக செரிக்க கூடிய உணவும், நல்ல நீரும் வேண்டும்.

(b) சுற்றுப்புற சூரியவெளிச்சமும், சுத்தமான, தூயகாற்றும் தாராளமாக வேண்டும்,

(c) இயற்கையாக உடலுக்குள் உண்டாகும் கழிவுப் பொருள்களை அவ்வப்போது அகற்றி விடவேண்டும்.

(d) உடலுக்கு உகந்த உடற்பயிற்சியும், சரியான சுவாசப் பயிற்சியும், தினமும் மேற்கொள்ள வேண்டும்.

(e) நிம்மதியான மனமும், போதிய ஒய்வும் மனிதனுக்குத் தேவை

(f) நச்சுப்பொருள்களும், விஷ நோய்க்கிருமிகளும் உடம்புக்குள் புகாதபடி சதா கண்ணும் கருத்துமாய் இருக்க வேண்டும்.

(g) சீதோஷ்ணஸ்திதி மாறுதல்களினுலும் உதாரணமாக, கடும்-மழை, புயல் காற்று, அதிஉஷ்ணம், நவீனகால அணுகுண்டு பரிசோதனைகளாலும் மனித இனத்திற்குத் தீங்கு நேராதபடி அந்தந்த அரசாங்கங்கள் நன்குகவனித்துக்கொள்ள வேண்டும்.

(h) அளவாக அறுசுவை உணவுஅருந்த வேண்டும். (அதாவது, தாது உப்புக்கள், வைட்டமின்கள், கார்போஹைட்ரேட்டு, கொழுப்பு, புரோட்டீன் போன்றவைகள்.)

(i) பொதுவாக மனித இனம் அளவோடு மக்களைப் பெற்று ஆனந்த வாழ்வு வாழ வேண்டும்.

(j) மது, லாகிரி வஸ்துக்கள், புகைபிடிப்பது போன்ற பழக்க வழக்கங்களை நீக்கவேண்டும்.

## அலோபதி வைத்திய வரலாறும் தத்துவமும்

இப்பூமண்டலம் தோன்றிய காலத்தில் ஆதிமனிதன் குரங்கு என்ற மிருக இனத்திலிருந்து படிப்படியாக மனித உருவம் உருவாயிற்று என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். உதாரணமாக டார்வின் என்ற ஆராய்ச்சியாளரின் ஆய்வுகளிலிருந்து தெரிய வருகிறது. சுமார் கி. மு. 3000 ஆண்டுகளுக்கு முன் இந்துஸ்தான் என்று அழைக்கப்படும் நமது இந்திய நாட்டில் மந்திரம், தந்திரம், செடி, கொடி இவைகளிலிருந்து அநுபவ வாயிலாக சில ஏட்டுச்சுவடிகளும் சில கல்வெட்டுக்களும் வைத்திய சாஸ்திரத்தைப் பற்றிக் கூறுகின்றன. இந்தியாவில் அக்காலத்திலேயே பலவித அபூர்வ மருத்துவ மூலிகைகள் ஏராளமாக கிடைத்தன. பின்னர் காசியில் ஒரு வைத்தியப் பள்ளி அமைக்கப்பெற்று அக்காலத்திலேயே ஆயுர் வேத வைத்தியம் பற்றியும் உடல் கூறு சாஸ்திரம் பற்றியும் கூறப்பட்டிருக்கின்றது. சரித்திர நூலில் பெரும் பகுதி வைத்திய சிகிட்சை முறைகள் பற்றியும் மந்திரம் தந்திரம் இவைகளில் நம்பிக்கை கொண்டும் கூறப்பட்டிருக்கிறது. ஆதிமனிதர்கள் உடல் நலம் பாதிக்கப்படும் போது உதாரணமாக அம்மை, ஜுரம் போன்ற நோய்கள் பைசாசு (பேய் பிஷாசுகள்) பூதகணங்கள், இவைகளால் ஏற்படுமென்று நம்பிக்கை கொண்டிருந்தார்கள். மற்ற நாடுகளைவிட முக்கியமாக சீனுவில் வைத்திய சிகிட்சைக்கும் மந்திர தந்திரங்களுக்கும் மிகத் தொடர்பு இருந்து வந்திருக்கிறது. தற்பொழுது கூட சீனர்கள் பேய் பிசாசு முதலியவைகளில் நம்பிக்கை வைத்திருக்கின்றனர். புராதனச் சீனுவில் தன்தேச (சுதேச வைத்தியம்) வைத்தியத் தொழிலுக்கு மிக்க கௌரவம் அளிக்கப்பட்டு வந்தது. கி.மு. 3000 ஆண்டுகளுக்கு முன்னர் ''ஹுவாங்தி'' என்பவரால் வைத்திய சாஸ்திரம் எழுதப் பெற்று இருக்கின்றது. அதில் உடற்கூறுசாஸ்திரம், சரீரசாஸ்திரம்

விரிவாக எழுதப்பட்டிருந்தாலும் சஸ்திர சிகிட்சை (அறுவைச் சிகிச்சை)பற்றிய கவனம் அவ்வளவாக எழுதப்படவில்லே. ஆகவே அது அங்கு சிறப்பாக விளங்கவில்லே. கி. மு. 1500ல் எகிப்திய நாட்டில் வைத்திய சாஸ்திரம் சிறப்புற்று விளங்கியது. உதாரணமாக கோரைப் புல் (EBERS PAPYRUS) என்ற ஒரு வகை புல்லிருந்து தயாரிக்கப் பட்ட காகிதத்தில் எழுதப்பட்டுள்ள வைத்திய சாஸ்திரம் நைல் நதிக் கரையிலிருந்து கண்டெடுக்கப்பட்டிருக்கின்றது. அதில் கண்ணேய்க்கு சில சிறந்த மருந்துக்ள் கூறப்பட்டிருக்கின்றது. ஆனுல் இம் மருந்து களேக் கண்ணில் போடுவதற்கு முன்னுல் சிலமந்திரங்களே ஜெபித்து போட வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

அக்காலத்தில் வைத்தியர்கள் பல் வேறு துறைகளில் தேர்ச்சி பெற்று நிபுணத்துவம் பெற்று இருந்ததாகத் தெரிய வருகின்றது. உல கத்தில் மற்ற சாஸ்திரங்களேப் போலவே நாகரீகத்திற்கும், வைத்திய சாஸ்திர வரலாறுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை, இன்றும் நன்கு அறிவோம். ஆசியாவைச் சேர்ந்த மொஸபட்டோமி-யோ என்ற நகர் நாகரீகத்திற்குத் தாயகமாக விளங்கி வந்திருக்-கிறது. இங்கு வசிக்கும் பாபிலோனியர்கள் மிருகங்கள் முதலியவற்றை அறுத்து வைத்திய சாஸ்திரம் பயின்ருர்கள். ஆட்டின் கல்லீரலின் அமைப்பை அறுத்து நன்கு கவனித்து அதை மட்டிலும் ஆராய்ந்-தார்களே தவிர உடற்கூறு சாஸ்திரத்தைப் பற்றி ஆராயவில்லே. முதன் முதலாக எகிப்தில் பிரசித்தி பெற்ற அலோபதி வைத்தியர்-கள் தோன்றியதாகக் கூறுகின்றது. பாபிலோனியாவைச் சேர்ந்த ஹம்முராபியும் (Hammurabi of Babylon) ஆயிரம் வருஷங்களுக்கு முன்பிருந்த இம்ஹோடோப்பும் (IMHOTOPE) சிறந்து விளங்கினர். கிரேக்க நாட்டிலும் ஆரம்பத்தில் வைத்தியத்துறையில் மந்திர தந்-திரங்கள் இடம் பெற்றிருந்தன. கி. மு. 460-ம் ஆண்டில் ஹிப்பா கிரடிஸ் (HIPPOCRATES) என்பவர் பிறந்தார். அவரே அலோ-பதி வைத்தியத்தின் தந்தையுமாவர். அவர் சில வழிமுறைகளேக் கையாண்டு சில அறிவுரைகள் கொடுத்து வைத்தியத் துறையில் புகுவோர் நோயாளிகளுக்கு சகல விதத்திலும் உதவி அளிக்க வேண்டுமென்றும் நோயாளிகளே நன்கு கவனித்து அவர்களுடைய தோற்றங்களேயும் கேட்கும் கேள்விகளுக்கு பதில் அளிக்கும் விதங்-களேயும் நன்கு புரிந்து மனதில் பதிய வைத்து நோயின் தன்மை யை அறிய வேண்டுமென்றும் இவர் கூறுகிருர். அறுவை சிகிட்சை (சஸ்திர சிகிட்சை) செய்வதிலும் நிபுணராக விளங்கினுர். இத்

தொழிலின் கௌரவத்தையும், அந்தஸ்தையும் உயர்த்தியவரில் முதன்மையாக விளங்கினர். கி.மு. நான்காம் நூற்றுண்டில் பிளேட்–டோவின் சிஷ்யர் அரிஸ்டாட்டில் என்பவர் வைத்தியத்துறையில் முக்கிய ஸ்தானம் பெற்று வந்தார். பின்பு எகிப்து நாட்டில்தான் வைத்திய சாஸ்திரம் மெதுவாக வளர்ந்து வரலாயிற்று. அலெக்–சாண்டிரியா நாட்டிலும் வைத்திய சாஸ்திரம் சிறப்பாக செயல் பட்டுப் புகழுடன் விளங்சியது. இங்கு அரிய பெரிய வைத்தியநூல்-கள் ஏழுலட்சம் கொண்ட நூல் நிலயம் இருந்தது. அதை சில காட்டுமிராண்டிக் கூட்டத்தினர் இந்நிலயத்தைத் தாக்கி தீவைக்கப் பட்டதாகக் கூறப்பட்டிருக்கின்றது. கி.மு. இரண்டாம் நூற்ருண்டில் இத்தாலி தேசத்தின் தலைநகரான ரோமாபுரி நகரம் நாகரிகத்தில் சிறந்து விளங்கியது. அங்கு அக்காலத்தில் அஸ்கிளி பியாடிஸ் (Asclepiades) என்பவர் சிறந்த வைத்திய மேதையாக விளங்கினர். பின்பு கி. பி 30-ஆம் ஆண்டில் ஒரு சிறப்புற்ற வைத்திய புஸ்தகம் எழுதப் பெற்றது. இதை எழுதியவர் அரேலியஸ் கார்னிலியஸ் (Aurelius Cornelius Celsus). கி. பி. 131-ஆம் ஆண்டில் கிளாடியஸ் காலனஸ் என்ற அறிஞர் பல வைத்திய நூல்களை எழுதி கீர்த்தியும் புகழும் பெற்ருர்.

நாகரீக நகரமாகிய ரோமாபுரி தேசத்தில் கி. பி. 162-ஆம் ஆண்டில் மார்கஸ் அரேலியர் என்பவர் மன்னராக இருந்தார். அவர் கிளாடியஸ் என்ற வைத்திய மேதைக்கு வேண்டிய உதவிகளைச் செய்து இவ்வைத்திய சாஸ்திரத்தை ஊக்குவித்து சிறப்புறச் செய் தார். உடற்கூறு நூல், சரீர சாஸ்திரம், உடல் இயங்கும் விதம் முதலியவற்றிற்கு முறையான ஆராய்ச்சியை வகுத்து விஞ்ஞான ரீதியில் இவ்வைத்திய சாஸ்திரத்தை ஆராய்ந்து நிலை நாட்டினர். உதாரணமாக சிறுநீரகத்தில் (Kidney) சிறுநீர் சுரக்கின்றது என்–பதைக் கண்டுபிடித்தார். இந்த மன்னருக்குப் பின் ரோமர் நாக–ரிகம் சிதைவுற்றது. கிரேக்க நாட்டில் வைத்தியத் துறையில் ஏற்பட்ட அனுபவத்தையும், அறிவையும் அறிஞர்கள் சிலர் வைத்திய புஸ்தகங்களை எழுதிப் பரப்பினர். இவ்வாறு கிரேக்க அறிஞர்களால் எழுதப்பட்ட வைத்திய புஸ்தகங்கள் கிறிஸ்தவமதத்தின் ஒருபிரிவைச் சேர்ந்த நெஸ்டோரியர்களால் (Nestorians) அவர்கள் நாடுகடத்தப் பட்டபொழுது வெளியேறின. அவர்கள் மொசப்பட்டோமியாவில் குடிறேி ஜண்டி ஷாபூரில் ஒரு வைத்தியப் பள்ளியை நிறுவினர்கள். கி.பி. 431ஆம் ஆண்டு முதல் சுமார் 300 வருஷங்கள் வரை இப் பள்ளியிலுள்ள வைத்திய புஸ்தகங்களுக்கு மதிப்பும் கீர்த்தியும் ஏற்-

படவில்லை சுமார் கி.பி. 732 ஆம் ஆண்டில் முகம்மது நபி பிறந்தார். இவரின் முயற்சியாலும், இவரது சிஷ்யர்களின் கவனம் வைத்திய நூலில் செலுத்தப்பட்டது. நெஸ்டோரியர்களால் கொண்டு வரப்பட்ட வைத்திய புஸ்தகங்கள் அனைத்தும் அரேபியா பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டது. அதனால் அரோபியா நாட்டின் தலை நகரான பாக்தாத்தில் 800கும் மேற்பட்ட அரோபிய வைத்தியர்கள் தோன்றி தொழிலை நடத்தி வைத்தியத்தைப் பரப்பினர். இவர்களில் முக்கியமானவர் ஹுனேன் இபின் இஷாக் (Hunain Iben Ishaq) என்பவராவர். இவர் கண்நோய்களுக்கு சிறந்த சிகிட்சை முறைகளை எழுதி சில நூல்களை வெளியிட்டார். அப்பொழுது அரேபியாவை ஆண்ட காலிப் என்ற மன்னரின் உதவியால் ஆஸ்தான வைத்தியராக நியமிக்கப்பட்டார். பல மேல் நாட்டு வைத்திய நூல்களை அரேபியா பாஷையில் மொழி பெயர்த்தார். காலிப் மன்னர் கட்டளையிட்ட ஒரு சம்பவத்தால் பாஷாண மருந்துகளை எக்காரணத்தைக் கொண்டும் தயாரிக்க மாட்டேனென்று கூறிவிட்டார் இம்மன்னர் இவருடைய அஞ்சாநெஞ்சத்தைக் கண்டு வியந்து மெச்சி பல சன்மானங்களை வழங்கினர். அதன் பிறகு கி.பி. 860 ஆம் ஆண்டில் ராஜஸ் என்ற சிறந்த வைத்தியர் பெரியம்மை, சின்னம்மை, தட்டம்மை முதலிய கொடிய நோய்களைப் பற்றி கட்டுரைகள் வரைந்து வெளியிட்டார். பிறகு இபின் சின்னு என்ற அபிசின்னு என்ற வைத்தியர் கீர்த்தியும் புகழும் பெற்று 18ம் வயதிலேயே பாரசீக மன்னரால் ஆஸ்தான வைத்தியராக நியமிக்கப்பட்டார். வைத்திய தொழிற்குச் சிலவிதிகளை விதித்து ஒழுக்க நியதிகளை வகுத்து வெளியிட்ட காரணத்தினல் பெயரும் புகழும் பெற்றூர். இவர் பாரசீக மன்னருக்கு ஏற்பட்ட குடல் புண் நோயையும் தீர்த்து வைத்ததாகச் சொல்லப்படுகின்றது. பின்பு கி.பி. 10ம் நூற்றூண்டில் வைத்தியத் துறையில் மறுமலர்ச்சி ஏற்பட்டு நாவித பண்டிதர்கள் என்று அழைக்கப்படும் (Barber Surgens) அறுவைத் துறையில் சிறந்து விளங்கினர்கள். இப்பொழுதும் சில நாடுகளில் இப்பண்டிதர்களைக் காணலாம். ஐரோப்பா தேசத்தில் 8வது ஹென்றியின் ஆட்சிகாலத்தில் பலஆங்கிலேயர்கள் வைத்தியத் துறையில் புதிய புதிய விஷயங்களை ஆராய்ச்சியின் வாயிலாகக் கண்டு பிடித்தனர் அக்காலத்தில் தான் ஒரு சிறந்த வைத்தியக் கல்லூரி (Royal collcage of Physician) என்ற பெயரால் அழைக்கப்பட்டது.

அதன் பிறகு கி.பி.1568ஆம் ஆண்டில் வில்லியம் ஹார்வி என்ற ஆங்கிலேயே வைத்தியர் மனித உடலில் ஓடும் இரத்த ஓட்டம் பற்றி விரிவாக புஸ்தகம் எழுதினர். இப்புஸ்தகம் கி.பி. 1628 ஆம்

ஆண்டில் வெளியிடப்பட்டு உலக முழுவதும் பரப்பப்பட்டது.இப்புஸ்தகமானது சீனு தேசத்து வைத்தியராகிய ஹுவாங்தீ என்ற வைத்தியரால் கி.மு. 2600ம் ஆண்டில் எழுதப்பட்ட குறிப்புகளை அடிப்படையாக வைத்து எழுதப் பெற்றது. அதன் பிறகு கி.பி. 1675ஆம் ஆண்டில் ஐரோப்பாதேசத்தில் ஏற்பட்ட பிளேக் கொள்ளை நோய்க்குப் பின் இவ்வைத்தியத்துறைக்கு பல முன்னேற்றங்கள் ஏற்படலாயிற்று. அதன் எதிரொலியாக பெரியம்மை நோய்க்கு அம்மை குத்துதல் (vaccination) கண்டு பிடிக்கப்பட்டது. பின்பு அறுவை சிகிச்சை செய்யும் போது நோயாளிகள் படும் வேதனையை உணர்ந்த வைத்தியர்கள் அதை தவிர்க்கும் பொருட்டு ஆராய்ச்சியில் இறங்கினுர்கள். கி.பி. 1800 ஆம் வருடத்தில் ஹம்பரி டேவி என்ற மேதை ஒரு வகை மயக்க மருந்தை (Laughing Gas) கண்டு பிடித்தார். கி.பி. 1818ஆம் ஆண்டில் ஈதர் என்ற மயக்க மருந்து கண்டு பிடிக்கப்பட்டது. கி.பி. 1840 ஆம் ஆண்டில் க்ளோரபாம் என்ற மயக்க மருந்தை எங்க் சிம்ஸன் என்பவரால் கண்டு பிடிக்கப்பட்டது. இதன் பிறகு அறுவை சிகிச்சை வலி தெரியாமலிருக்க கொக்கயின் என்ற மயக்க மருந்துகள் கண்டு பிடிக்கப்பட்டது.

இரத்த ஓட்டத்தின் அடிப்படையை ஆதாரமாக வைத்துக் கொண்டு நோய் விளைவிக்கும் காரணங்களை அறியும் பொருட்டு ஆராய்ச்சியாளர்களால் அணுதரிசனி (microscope) கண்டு பிடிக்கப் பட்டது. இதன் உதவியால் நோய்களுக்கு முக்கிய காரணம் அணு உயிர்கள் தான் என்பது நெல்லிக்கனி போல் விளங்கலாயிற்று. லூயி பாஸ்டியர் (Louis pastear) என்ற அறிஞர் கி.பி. 1854 ஆம் ஆண்டு முதல் பல சிஷ்யர்களின் உதவியால் சிறந்த ஆராய்ச்சிகளை நடத்தி வந்தார்கள். அவர்கள் வெவியிட்ட கருத்தின்படி நோய்களை உண்டாக்கும் நோய்க் கிருமிகளின் வகைகளாகிய காக்கைகள், வைரஸ்கள் போன்ற அணு உயிர்கள் தான் அல்லது பாக்டீரியாக்கள் நோய்களை தோற்றுவிக்கின்றன என்பதை அறியலானேம். அது முதற்கொண்டு அணு உயிர் விஞ்ஞானம் அவ்வப்போது வளர்ச்சி பெறஆரம்பித்தது.

## அணுவுயிர் விஞ்ஞான சாஸ்திரம்

இப்பொழுது தற்காலத்தில் அணுவுயிர் விஞ்ஞானம் ஒரு அரிய பெரிய வைத்தியக் கலையாகவே விளங்குகின்றது அதாவது இன்னின்ன வியாதிகளுக்கு இன்னின்ன அணுவுயிர்கள் தான் காரணம் என்று கண்டுபிடிக்கும்படியான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. இயற்கையாக நம் உடலிலே அமைந்த தற் காப்புப் (inmunity) பயன்

படுத்தி வியாதி விளைவிக்கும் அணுவுயிர்களை அழிக்கும் முறைகளை வகுத்து வருகின்றார்கள்.

1854ம் வருடம் முதல் பல வைத்திய அறிஞர்கள் இதில் கவனம் செலுத்தி ஆராய்ச்சிகளை நடத்தி வருகின்றார்கள் அதில் லூயி பாஸ்டியர் (Louis pasteur) போன்ற அவரது சிஷ்யர்களில் ஒருவராகிய மெட்ச் நிகாவ் என்பவரும், மற்றும் சிலரும் ஒரு கருத்தை வெளியிட்டனர். அதாவது இரத்தத்திலுள்ள வெள்ளை அணுக்கள், நோய்களை உண்டாக்கும் அணுவுயிர்களை (நோய்க் கிருமிகளை) நெருங்கி நேருக்கு நேர் தாக்கி அவைகளைச் சூழ்ந்து கொண்டு அவைகளை ஜீரணித்து வந்ததாகக் கூறினார்கள்.ஆனால் ஜெர்மானிய தேசத்து மேதைகளாகிய வான்பெரிங், ராபர்ட்காச் போன்றவர்கள் இரத்தத்திலுள்ள ஒருவகை நிணநீர்களே இந்தத்தற்காப்புத் தன்மைக்குக் காரணம் என்று கூறினார்கள். இந்த இரு சாராருக்கு மிடையே பெருத்த, வாக்கு வாதங்கள், தர்க்கங்கள் எழுந்தன.

மெட்சி நிகாவ் என்பவர் சில பரிசோதனைகளை நடத்தி வந்தார். எலி, தவளை தெள்ளுப் பூட்சியின் உடலில் சிலவகை காளான்களைப் போன்ற கிருமிகளைச் செலுத்தி பரிசோதித்ததில் இவைகளின் உடலில் உள்ள தற்காப்பு ஸெல்கள் கிருமிகளை எதிாத்துப் போராடுவதைக் கண்டார். இதிலிருந்து அவைகளில் செலுத்தப்பட்ட கிருமிகள் வலுவிழந்தும், எண்ணிக்கையில் குறைந்தும் இருந்ததால் அவ்வுடம்பிலுள்ள தற்காப்பு ஸெல்களுக்கு இரையாகி விடுகின்றன என்பதைக் கண்டார்.இவ்வகை தற்காப்பு ஸெல்களை பாகோஸைட்டுகள் (Phagocytes) என்று மெட்ச் நிகாவ் கூறிவந்தார். இக் கொள்கையைப் பின் பற்றி உடலைத் தாக்கும் அணுவுயிர்களை எதிர்த்துப் போராட வழிவகை செய்ய வேண்டும் என்று விஞ்ஞானிகள் முயற்சி செய்யலானார்கள். அதில் லூயி பாஸ்டியரின் சீடர்களும், மற்றவர்களும் இந்த இயற்கை அரணைப் பலப்படுத்த வேண்டும் என்று ஆராய்ந்தார்கள் கி.பி. 1877ம் ஆண்டிலேயே ஒரு முடிவிற்கு வந்து 'அணுவுயிர்களாகிய' நோய்க் கிருமிகளை ஆராய்ந்து ஆந்த்-ராக்ஸ் போன்ற நோய்க் கிருமிகளின் வளர்ச்சியைத் தடைப்படுத்த முடியும் என்று கூறி வந்தார்கள்.

அதன் பின் பால் எர்லிக் (Pawl Ehrlick) என்பவரும் அவரது சீடர்களும் ஒவ்வொரு நோய்க் கிருமிகளையும் நேருக்குநேராக தாக்கிக் கொல்லக் கூடிய அற்புதசக்தியுள்ள மருந்துகளைக் கண்டுபிடிக்கலாம் என்று உறுதியுடன் நம்பினார்கள். இதையறிய ரஸாயன கூட்டுப்

பொருளைக்கண்டு பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். உடலிலுள்ள தற் காப்பு செல்களின் சக்தியை பின்பற்ற, அதில் கவனம் செலுத்தவில்லை.

எர்லிக் கொள்கையைப் பின்பற்றி சல்பா குரூப் போன்ற மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டன. ஆனால் பாஸ்டியர் வகுத்தவழியைப் பின்பற்றி பூஞ்சாணத்திலிருந்து (பூஞ்சணம்) தயாரிக்கப்படும் ஆன்டிபயோடிக் (Antibiotic) என்று கூறப்படும் பெனிஸிலின் போன்ற பூஞ்சணமருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. பெனிஸிலின் மருந்தை முதன்முதலில் 1906ம் ஆண்டில் அலெக்ஸான்டர்பிளமிங் (Alexsandar plehming) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. அவர் வாக்ஸீன், ஸீரம் சம்பந்தமாக, மேகநோய்களுக்கும் மருந்தைக் கண்டுபிடிக்க முயற்சித் தார்.

அணுவுயிர்களை எதிர்த்துப் போராடுவதில் பாஸ்டியர் கொள்கையாகிய, பூஞ்சணத்திலிருந்து தயாரிக்கப்பட்ட பெனிஸிலின் போன்ற மருந்துகளும், பால்எர்லிக் கொள்கையாகியாகிய சல்பா மருந்துகளும். அவ்வளவாக இந்த முரண்பட்ட கருத்துக்களைத் தெளிவு படுத்த வில்லை அதாவது சல்பா மருந்துக்கள் அனுவுயிர்களை (நோய்க் கிருமிகளை) நேரடியாகக் கொல்லுவதுமில்லை: பெனிஸிலின் போன்ற பூஞ்சண மருந்துகள் உடலின் தற்காப்பு சக்தியை ஊக்குவிப்பதா கவும் தெரியவில்லை. இதற்கு இடையே தற்காலத்தில் இரண்டுவித கருத்துக்களுக்கும் மையமாக ஓர் புதியமுறை உருவாகி இருக்கின்றது. அதாவது ரஸாயன முறையில். (chemothreapy) சிகிட்சை செய்யும் ஏற்பாடு என்பது தான் அது. ஆயினும். சல்பாகுரூப் மருந்துகளும், பெனிஸிலின் குரூப் மருந்துகளும், சிலருக்கும் சிலசமயங்களில் தீங்கு ஏற்பட்டாலும் பலருக்கும் அவைகள் அற்புதமாக வேலை செய்து நல்ல பலன்கள் கிடைத்தது என்பதை யாராலும் மறுக்க முடியாது.

(அடுத்த இதழில் தொடரும்).

## (முன் இதழின் தொடர்ச்சி) சிலேத்தும நாடி

பாம்பு நடையில் தெரியாது. ஊர்ந்து செல்லும் தன்மை- யுடையது. மீறினால் உடல் காயும். வற்றும் குளிர்ந்து நடுங்கும் சாப்பாடு செல்லாது. மேல் மூச்சு, இருமல், வியர்வை, நெஞ்சு விலாவில் வலி, நாவில் வழு வழுப்பு முதலியவைகள் ஏற்படும். பகல் 2 மணியிலிருந்து சாயங்காலம் 6 மணி வரை நாடி பேசும்.

மீண்டும் சாயந்திரம் 6 மணி To 10 மணி வாதம்
இரவு 10 To 2 மணி காலை பித்தம்
காலை 2 மணி To 6மணி சிலேத்துமம்

பெண்களுக்கு முதல் நாடி வேகமாக அடித்து மறு விநாடியில் இரண்டாவது நாடி உறப்பாக அடித்தால் கர்ப்பம் என்று கூறலாம்.

கலப்பு நாடி தெரிந்திப்பு

**வாதத்தில் வாதமானுல்** உடல் நொந்து சுருங்கி உடல் பதறும். அன்னம் செல்லாது.

**வாதத்தில் பித்தமானுல்** — வாய் குளரி கால்களில் வீக்கம் உண்டாகும்.

**வாதத்தில் சிலேத்ம மாகில்** — உடல் வீங்கும், தலையிடிக்கும் மெய் வெளுக்கும், அன்னஞ் செல்லாது. நாளுக்குநாள் வீக்கம் அதிகமாகும்.

**பித்தத்தில் வாதமாகில்** — கைகால் குத்தும், பிடரிகள் வலிக்கும், வாய் குளரும். சுரம் அதிகமாகும். புத்தி தடுமாறும். பொல்லாக் கோபம் உண்டாகும்.

**பித்தத்தில் சிலேத்ம மாகில்** — வாய் குளறும், பிதற்றும், வாந்தியாகும், வாயில் நுரைவரும், நீர்வரும், தலைசுற்றும், பித்தம் ஒடுங்கும்.

**சிலேத்மத்தில் வாத மாகில்** — நாவு கருப்பு ஏற்பட்டு கசப்பு. இனிப்பு மாறி மாறி ருசிவரும். பேச்சு தடுமாறும். கபம் நெஞ்சில் கட்டும். கண்ணில் பீழை வரும்

**சிலேத்மத்தில் சிலேத்மமாகில்** — கண் விழிகள் வட்டம் கொள்ளும். வியர்வை அதிகரித்து உயிர் பிரியும்.

**வாதத்தில் சிலேத்மம் சேரில்** — ஜன்னி இழுப்பு வரும். மயக்கம் வரும், சோம்பல் மூர்ச்சையாகி விடுவார். சோகை, வாந்தி ஏற்படும்.

**பித்தத்தில் வாதம் சேரில்** — மண்டைக்குத்து, பீனிசம், ஆசன பௌந்திரம், அறையாப்பு, வாய், மூலநோய் உண்டாகும்.

**பித்தம் வாதத்தில் ஏறும்** — மஞ்சள் நோய் நீர் ஆம்பல், மகோதரம், பாண்டு, கெர்ப்பபையில் சூதககட்டி கெர்பத்திலிருக்கும் சிசு வெப்பு நோயால் பாதிக்கப்படுகிறது.

**சிலேத்மத்தில் பித்தம் சேரில்** — வாயில் எச்சல் ஊறல், கழிச்சல், வயிற்ருேட்டம், வாந்தி, சுரம் அதிகமாகும்.

**மரணக்குறிகள்** - மனிதர்கள் சுவாசிக்கும் இரண்டு துவாரங் களிலும் முன்னோர்கள் வகுத்த விபரப்படி இடது பக்கத்து நாசி துவாரம் இடகலை. வலது பக்கத்து நாசி பிங்கலை என்று வகுத்துக் கூறியிருக்கிறார்கள். நோய் வாய்பட்ட நோயாளியை படுக்க வைத்து நாசியின் வழியாக வரும் காற்றை கணக் கிட்டுப் பார்த்தால் வலது பக்கத்தில் நாசி வழியாக (பிங்கலை) சேர்ந்தாற்போல் 50 மணிநேரம் துயந்தாற் போல் அடித்தால் அந்நோயாளி 3 ஆண்டுகளில் இறந்து விடுவார். அவ்விதமே எந்த நோயாளியும் 3 தினங்கள் 75 மணிநேரம் தொடந்தாற் போல் இடை கலையிலேயே சுவாசம் நடக்குமானால் 1 மாதத்தில் நோயாளி இறந்து விடுவார்.

**மரண நாடி** :- வலது உள்ளங்கால் (பாதம்) அதிக சூடாகவும், இடது உள்ளங்கால் குளிர்ந்தும், முழங்கால் முட்டுகளிரண்டும் குளிர்ந்திடில் பத்து நாட்களில் இறந்து விடுவர்.

முழங்கால் முட்டு இரண்டும் குளிர்ந்தும், உச்சியில் வியர்த்தும் நாசி விறைத்து, இளைப்பு, விக்கல் தோன்றி உடல் பூராவும் குளிர்ந்தும், விழிகள் இரண்டும் சுழன்று கொண்டே இருந்தால் 3 நாட்களில் இறப்பார். அவ்விதமே நெற்றி, பிடரி, கழுத்து உட்புறம் குளிர்ந்து கண்விழிகள் நீல நிறமடைந்து நெஞ்சில் கபம் கட்டி இழுப்பு ஏற்படின் 3 நாட்களில் மரணமடைவார். மூக்கும் முழங் கை பள்ளமும் குளிர்ந்து உள்ளங்கால் (பாதம்) சூடாகவும் தொண்டை கரகரப்பும் ஏற்படின் 5 தினங்களில் மரணமுண்டாகும். அடித்தொடையும், உள்ளங்கால்களும் குளிர்ந்து இரண்டு காதுகளும் விரைத்து விட்டால் 2 தினங்களில் மாண்டு விடுவர்.

**நவின கால அலோபதி, ஹோமியோபதி நாடி பார்க்கும் விதம்.**

ஆயுர் வேத சித்த முறைப்படி வாத, பித்த, சிலேத்மத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. அநுபவ ரீதியில் மேற்படி வைத்தி யத்தில் வியாதியை நிர்ணயிக்க முடியும். ஆனால் ஷை இரண்டு வித வைத்திய துறையில் உள்ளவர்கள் நிமிஷம் 1க்கு எத்தனை துடிப்புகள் ஏற்படுகிறது. என்ற அடிப்படையில் நல்லஆரோக்கியமாக இருக்கும் நிலையில் மனிதர்களுக்கு வியாதியற்ற நாடியானது ஒரே சீராகவும், ஒழுங்கான நடையுடனும், மிருதுத் தன்மையுடனும் இருக்கும். வாலிபர்களுக்கு பலமாகத் துடிக்கும். வயோதிகர்களுக்கு சற்று கெட்டிபட்டு பலமுள்ளதாயிருக்கும். பெண்களுக்கும், குழந்தை களுக்கும் வியாதியற்ற நாடியானது சிறிது வேகமாயும், ஒரே ஒழுங்-

காகவும் கனமில்லாமலிருக்கும். சுக சரீரத்தில் சராசரி கைநாடி நிமிஷம் ஒன்றில் அடிக்கும் கணக்கு பின்வருமாறு ;-

| | | | | |
|---|---|---|---|---|
| பிறந்த சிசுக்களுக்கு | 140 | முதல் | 150 | வரை |
| 1 முதல் 2 வயதிற்குள் | 120 | ,, | 130 | ,, |
| 2 ,, 10 ,, | 90 | ,, | 100 | ,, |
| 10 ,, 15 ,, | 80 | ,, | 90 | ,, |
| இதற்கு மேல் | 72 | ,, | 80 | ,, |
| வயோதிகர்களுக்கு | 65 | ,, | 70 | ,, |

பெண்களுக்கு 8 வயதிற்கு மேல் மேலே குறிக்கப்பட்ட அளவிற்கு மேல் 7/12 வரை துடிப்புகள் அதிகமாயிருக்கும். இரத்தத்தில் உப்புகள் அதிகமாயிருப்பதினுல் சிகப்பு வடிவங்கள் வெடித்து அழிந்து போகா வண்ணம் காக்கப்படுகிறது.

உப்பு குறைந்தால் ரத்தத்திலுள்ள செந்தாதுக்கள் வெடித்து அழிந்து ரத்தசோகை, பாண்டு போன்ற நோய்கள் ஏற்படும். இந் நோயுள்ளவர்களின் கை நாடி மெல்லியதாகவும், குறைந்து துடிக்கும் பலவீன முடையவர்களின். நாடி பலமில்லாமல் வேகமாகத் துடிக்கும். (சுமார் 90/95 வரை). இருதயக் கோளாறு இருப்பவர்களுக்கு ஒரு தடவை வேகமாயும் மறு தடவை மந்தமாகவும் நடக்கும். மூளையில் வேக்காடு அல்லது ரத்தக் குழாயில் அடைப்பு ஏற்பட்டால் நாடி நடையானது நான்கு தடவை சரியாகச் சென்று பிறகு ஒரு தடவை நின்று துடிக்கும். சிலருக்கு அதிக உழைப்பினுல் அஜீர்ணம், வயிற்றில்வாயு, உப்பிசம் ஏற்படின் நாடி நடை நின்று நின்று செல்லும். மரணந்தருவாயிலிருப்பவர்களுக்கு பெரும்பாலும் நாடி நடையானது இரண்டிற்கு ஒன்று விட்டு விட்டும் வேகமாகவும், மெல்லியதாகவும், துரிதமாகவும் இருக்கும்.

முதல்நாடி:- வேகமாகவும், உறப்பாகவும் அடித்து சுரம் இல்லாமலிருந்தால் மதுமேக வியாதி என்றும், சுரம் இருப்பின் (சிங்கில் நிமோனியா) கப சுரம் எனலாம். வேகமாகவும், அழுத்தமாகவும் அடித்தால் பீஜத்தில் காற்று தங்கியிருப்பதாய் அறிய வேண்டும். எந்தக் கை பக்கம் உணருகிறுமோ அந்தப் பக்க பீஜத்தில் காற்று இருப்பதாகச் சொல்லலாம். சுரம்இருப்பின் (டபிள் நிமோனியா) கபவாத சுரம் என்னும் இந்நாடி வேகமாகவும், விட்டு விட்டு அடித்தால் இரண்டு கைகளிலும் ஒரே மாதிரி இருந்தால் மேக நீர் அல்லது

வெட்டை பிடிப்பு நோய் எனலாம். கீழ்களில், இடுப்பில் வலி இருக்கும் நபர்களுக்கு வெட்டை பிடிப்பு (வெனீரியல் ரொமாடிஷம்) எனலாம். நாடி வேகமாக அடித்தால் (விஷ சுரம் 'மலேரியா' மண்ணீரலைப்பற்றின சுரம் எனலாம்.

**பித்தநாடி:-** விட்டு விட்டு அழுத்தமாய் ஒரே நிதானமாய் அடித்துக் கொண்டிருந்தால் பெண்களுக்கு சூதக வாய்வு என அறியவும். 3வது நாடி இலேசாக கையில் தட்டும்படி அடித்தால் (ஆஸ்துமா) சுவாச காச ரோகம் என அறியவும் கையில் தெரியும்படி அடித்தால் ஈளை இருமல் (பிரான்கைடிஸ்) எனலாம்.

2 **வது நாடி மாத்திரம்** வேகமாய் அடித்து சுரம் இருக்குமானல் பித்த சுரம் என அறியலாம். மூன்ருவது நாடியும் சேர்ந்து வேகமாய் அடித்தால் அவர்களுக்கு பித்த சீதள சுரம் (தலைவலி) முதலானவை: கள் இருக்கும்.

**சிலேத்தும நாடி**

மூன்ருவது நாடி மாத்திரம் இரண்டு கைகளிலும் ஒரே மாதிரி அடித்தால் வெட்டை நாள் பட்டதென்றும் கூறலாம். மற்ற இாண்டு நாடியும் கையில் தட்டுப்படாது. 3 வது நாடி வேகமாய் அடித்து மற்ற கையில் அடிக்காமல் 2 வது நாடியோ 1 வது நாடியோ அடித்தால் எந்தக்கையில் 3 வது நாடி மாத்திரம் அடிக்கிறதோ அதற்கு எதிர்ப் பக்கம் கழுத்து நரம்பு வலியும் ஒருத்தலை வலியுமிருக்கும். இதை முக சந்தி என்று சொல்லல் வேண்டும்.

3 வது நாடி மட்டும் தென்பட்டு சுரமும் இருந்து அதோடு வயிறு உப்புசமும், கல்லீரல் வீக்கமும் லேசாய் இருக்குமானல் சன்னித பாத சுரம் எனலாம்.

3வது நாடி மாத்திரம் அடித்து 2வது நாடி அடங்கி அடிக்கக் கண்டால் உள்ளே சுரம் இருக்கிறதென்றும், இவர்கள் நாடி சரியான நிலமைக்கு வரும் வரை நீராடல் கூடாது. நாடியின் மூலம் அனு-பவத்தால் எல்லா நோய்களையும் அறியலாம். சுரத்தின் அளவு டிகிரியையும் கூறலாம்,

வாத நாடிகளால் தெரிந்து கொள்ளும் முக்கிய வியாதிகள். ஆனைக்கால், சுரம், கீல்பிடிப்பு ,சூதகவாய்வு, அண்டவாய்வு, கபவாத-சுரம், மதுமேகம், நீராம்பல் முதலியன.

அண்ட வாய்வு பீஜத்தில் காணும் வீக்கம் (வலியுள்ளது) இதனை 1வது நாடியில் அறியலாம். இரண்டு கைகளில் 1வது நாடி ஒரே மாதிரியில்லாமல் ஒரு கையில் மாத்திரம் வேகமாக அடித்து

மற்ளுெரு கையில் 1வது நாடி தெரியாவிட்டால் தெரியாத நாடி பக்கத்திலுள்ள பீஜத்தில் வீக்கம் இருப்பதாகச் சொல்லலாம். இது போலவே ஆணேக்காலுக்கும் என அறியவும்.

க்ஷயரோகத்தின் இரண்டு கைகளிலும் ஒரே மாதிரியாய் 1வது நாடி நிமிடத்திற்கு 80க்கு மேல் துடித்தால் இருபக்கமும் குரல் வளேப்புண் என்றும், ஒரு கைமாத்திரமானுல் ஒருபக்கம் புண் என்றும் அறியலாம். ஸ்டெதாஸ்கோப் வைத்துப்பார்க்காமல் கோழை பரீட்சை செய்யாமலும் சொல்லி விடலாம்.

**N. B.** வாத நாடியாகிய முதல் நாடியும், இரண்டாவது நாடியும் ஏக காலத்தில் வேகமாய் அடித்து மூன்ருவது நாடி லேசாய் கலந்தால் அத்துடன் சுரமும் இருக்குமானுல் கபவாத சுரம் பிழைக்க மாட்டாரென்று சொல்லலாம். இருமல் இருக்காது கபமும் வரா—மல் சுரம் அதிகமாய் காயும் பெண்களுக்கு முதல் நாடி வேகமாக அடித்து அடங்கி மற்ற விஞடி உறப்பாக அடித்தால் கர்ப்பம் என-லாம். முதல் நாடி வேகமாகவும், பலமாகவும் அடித்தால் கெர்ப்ப பையில் ரணம் இருப்பதாய் உணர வேண்டும். பெண்களுக்கு முதல் நாடி வேகமாய் அடித்தால் வெட்டை என்றும் (லிகோரியா) வியாதி எனலாம். வீட்டுக்கு தூரமாவதற்கு முன் முகத்தில் கொப்பளங்கள் உண்டாகும். முதல் நாடி நிமிடத்திற்கு 80 துடிப்பிற்கு மேல் அடித்தால் க்ஷயரோகம். நுரையீரலேப் பற்றிய க்ஷயம் என-லாம். இரு நுரையீரலிலும் இரணம் இருப்பின் முதல் நாடியும், சிலேத்ம நாடியும் நிமிடத்தில் 80க்கு மேல் துடிப்பு இருக்கும். இதைக் கடினமான வியாதி பிழைப்பதரிது எனலாம். உலகத்தில் தோன்றிய ஜீவராசிகளில் ஆறு அறிவுகளுடைய ஜீவன்தான் மனித இனமாகும். முன்னேர்கள் வகுத்து ஆய்ந்து அறிந்து அனுபோக வாயிலாக அறு சுவை உணவை மனிதன் உண்பதால் அவனுக்கு ஆறு அறிவு அமையப்-பெற்றது. ஆகவே மனித இனம்தான் ஜீவராசிகளிலேயே உயர்ந்த-தும் முதன்மையுமாகும். மனிதனது ஆயுட்காலம் 121வயதுவரை அந்த அடிப்படையில் வாழ்ந்து வந்திருக்கிருர்கள். அதாவது பிறந்-தது முதல் 40 வயது வரை வாதத்தின் சாயலேயும், 41 லிருந்து 80 வரை பித்தத்தின் சாயலேயும், 81 முதல் 120 வரை சிலேத்து-மததின் சாயலேப் பெற்று அதனதன் குணுதிசயங்களேப் பெற்று கடைசியாக 121ம் ஆண்டின் ஆரம்ப முதல் ஒரு ஆண்டு காலத்தில் சளி, கப தொந்தரவுகளால் தாக்சப்பட்டு இம்மண்ணுலகை விட்டு பிரிந்து விடுகிருர்கள். என்று சாஸ்திரத்தில் சொல்லப்படுகின்றது.

80 வயதைத் தாண்டியவர்கள் எண்சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம் என்பதற்கு ஒப்ப மனித சரீரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் தலையிலுள்ள மூளையை பாதுகாத்து வந்தால் 120 வயது வரை வாழலாமென்பது சில சித்தர்களின் காயகல்ப சிகிச்சைகளில் கூறிய படி கீழ்கண்ட மருத்துவப் பொருள்களை உட்கொண்டு வந்தால் 120 வயது வரை வாழலாம்.

**விபரம் :-** அருகம்புல், ஆவாரை, செந்தாமரை, செந்தாமரை புஷ்பம், துளசிவகை, வல்லாரை (கருந்துளசி, நாதுளசி) வகையும் 100 வருடத்திய வேப்பமர உள் பட்டையின் சூரணமும், அறுசுவை உணவு' கசப்பு பொருளாகிய வெந்தயம் பாகற்காய், சுண்டை வற்றல் முதலியவைகள், புளிப்புக்கு புளிப்பு-மாதாளம் பழம், எலும்பிச்சம்பழம் இவைகளை 70 வயதிற்கு மேல் உண்ணவும்.

**துவர்ப்பு** பொருளாகிய தான்றிக்காய், மாச்சக்காய் தென்னம் பாளைசாறு, வாழைப் பூவின்சாறு, மங்குஸ்தான் தோடு, முதலியன வைகளைச் சாப்பிடவும். மாங்கொட்டை பருப்பும் சேர்த்துக் கொள்ள லாம். **இனிப்பு** பொருளாகிய பணங்கற்கண்டு, பழவகைகளின் முதன் மையான ஆப்பிள் பேரிச்சம்பழம், ஆங்கூர் திராட்சை போன்றவை

**உறப்பு :** மிளகு, திப்பிலி, சுக்கு

**கைப்பு என்ற உப்பு:** இந்துப்பு கிடைக்காவிடில் சோற்றுப்பை வாழை மட்டைச்சாறு விட்டு ஏழு தடவை காய்ச்சி எடுக்கவும். இரண்டு முறை பிரண்டை சாற்றுல் அரைத்து காயவைத்து எடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு முருங்க இலைச் சாற்றுலும் அறைத்து காய வைக்க வேண்டும் பிறகு சீசாவில் அடைத்து உபயோகிக்க வேண்டும். இது காய கல்ப சிகிச்சையில் சொல்லபட்ட முறையாகும்.

## Meteria Medica தாது ஜீவபொருள்கள் வகுப்பு (குணபாடம்)

இவ்வுலகம் ஐம்பெரும் பொருள்களால் உண்டாக்கப்பட்டது. பொருள்கள் அனைத்தையும் இருவகைகளில் அடங்கும். அதாவது அசையும் பொருளென்றும் அசையா பொருளென்றும் பிரித்திருக்கிறது. இவைகளை **பிருதிவி** என்ற மண் தாங்குகிறது. **ஆகாய மென்ற** வெளி, இடம் தருகிறது இவற்றை **அப்பு என்ற நீரும், தேயு என்ற நெருப்பும், வாயு என்ற காற்றும்**, வளர்த்தல், காத்தல்களைச் செய்கின்றது.

அசையாப் பொருள் அசையும் பொருள் ஆகிய இருவகை பொருள்கள்:- தாதுப்பொருள், தாவரப்பொருள், சங்கமப் பொருள் என முப்பாகுபாட்டினை உடையதாயிருக்கிறது.

**தாதுப் பொருள் :** 1. உலோகம், 2. காரசாரம் (உப்பு), 3. பாடாணம், 4. உபரசம் என்கிற 4 பிரிவுகளை உடையது.

**உலோகங்கள் விபரம்** 1. தங்கம், 2. வெள்ளி, 3. செம்பு, 4. நாகம் 5. உருக்கு 6. இரும்பு, 7. வெண்கலம், 8. பித்தளை, 9. தரா, 10. காரியம், 11. வெள்ளீயம், 12. இண்டாலிகம் (Ever Silver), 13. பிளாட்டினம், 14. யூரோனியம் என்பனவாம்

உலோகங்கள் செயற்கை, இயற்கை என இரு வகையாகப் பிரிக்கிறது. இதில் செயற்கை உலோகம் வெண்கலம், பித்தளை, தரா- போன்ற சில உலோகங்களை சேர்த்து செய்யப்படுவதாகும்.

1. **மூவகை உலோகங்கள் :** பொன், வெள்ளி, செம்பு
2. **ஐவகை உலோகங்கள்** பொன், வெள்ளி, செம்பு, ஈயம், வெங்கலம்
3. **ஏழுவகை உலோகங்கள்:** பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், வெண்கலம், தரா என்பன.
4. **எண்வகை உலோகங்கள்** பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, தங்கம், துத்தநாகம்
5. **ஒன்பது வகை லோகங்கள் :** பொன், வெள்ளி, பித்தளை, செம்பு, வெண்கலம், நாகம், வெள்வங்கம், கருவங்கம் அயம்.

ஈவர் சில்வர் என்ற புது உலோகம் மற்ற உலோக கலப்பு-களிலிருந்து தயாரிக்கப்பட்டது. இது நடைமுறையில் பாத்திரங்கள் செய்ய உபயோகப்பட்டு வருகிறது.

**மருத்துவத்துறையில் உபயோகமாகும் உலோகங்கள்:**-தங்கம், வெள்ளி, நாகம், கருவங்கம், வெள்வங்கம், தாமிரம், இரும்பு.

## II. காரசாரம் (உப்பு) 25

காரசாரம் 25 (உப்பு)ல் இயற்கை உப்பு 10 செயற்கை-உப்பு 15 எனலாம்.

### இயற்கை உப்பு -10

1. சூடன், 2. சீனம், 3. பூநீறு. 4. வளையலுப்பு, 5. பச்சை கற்பூரம், 6. கல்லுப்பு, 7. கறியுப்பு, 8. பொன்னம்பர், 9. மீனம்பர் 10. கடல் நுரை என்பவை.

### செயற்கை உப்பு—15

1. இந்துப்பு, 2. பொட்டுலுப்பு, 3. வெங்காரம், 4. துருசு, 5. எவட்சாரம், 6. நவச்சாரம், 7. சத்திச்சாரம், 8. ஏகம்பச்சாரம், 9. கெந்தியுப்பு, 10. திலாலவணம், 11. கெந்திலவணம், 12. காய்ச்சு லவணம் 13. பிடால்லவணம், 14. சிந்துலவணம், 15 காசிலவணம்.

**பஞ்சபூத உப்புகளாவன :** 1. பிருதிவி-கல்லுப்பு 2. அப்பு-சத்திச்சாரம் 3. தேயு–வெடியுப்பு 4. வாயு–சீனம 5. ஆகாசம்–பூநீறு என்பவை.

**பஞ்சவுப்பு என்பது :** 1. கரியுப்பு. 2. இந்துப்பு. 3. வளையலுப்பு, 4. கல்லுப்பு, 5. வெடியுப்பு.

### 3. பாடாணம் 64ல், இயற்கை

பாடாணம் 32ம், செயற்கை பாடாணம் 32ம் அடங்கியுள்ளன.

### இயற்கை பாடாணம்

1. கறடக பாடாணம் 2. கோளகம் 3. சூத பாடாணம் 4. மருதாரம் 5. கந்தகம் 6. வீரம் 7. வைகிராந்தம் 8. தாலம்பம் 9. அமிர்தம் 10 சிரபந்தம் 11 தொட்டி 12. குதிரைப்பல் 13. சங்கு 14. கௌரி, 15. துத்தம், 16. பலண்டுறுகம், 17. காந்தம் 18. இலிங்கம், 19. சரகாண்டம் 20. தாளகம் 21. சிலை(மனோசிலை) 22. ஆவுபல், 23 சாலாங்கம், 24 கற்பரி, 25. கற்பாடாணம் 26. அஞ்சனம், 27. கச்சாலம், 28. சீதாங்கம் 29. சிலாமதம், 30. கார் முகில், 31. அப்பிரகம் 32. வெள்ளை

### செயற்கை பாடாணம்

1. புத்தோட்டுத் தொட்டி 2. பொற்றொட்டி, 3. செப்புத் தொட்டி, 4. எருமை நாத்தொட்டி 5 எமசிங்கி 6. இரத்த சிங்கி 7 மிருதாருசிங்கி 8. சாதிலிங்கம் 9. கருமுகில் 10. தீமுறுகல் 11. வெள்ளை 12. சவ்வீரம் 13. கோழித்தலைக் கெந்தி 14. வாணக் கெந்தி, 15. அரிதாரவைப்பு, 16. பவளப்புற்று. 17. கோடா சோரி, 18. பஞ்சபட்சி 19 குங்கும பாடாணம். 20. இரத்த பாடாணம் 21. துத்தம், 22. துருசு 23. இரசிதம், 24. தைலம், 25. சூதபாடாணம், 26. நீலம், 27. கந்தகம், 28. சோராபாடாணம், 29. காகம். 30. இலவணம் 31. நாக பாடாணம் 32. இந்திர பாடாணம்

## பஞ்ச பூத பாடணம்

1. பிரிதிவி - அரிதாரம் 2. அப்பு – சவ்வீரம் 3. தேயு - கௌரி, 4. வாயு - வெள்ளை 5 ஆகாயம் – இலிங்கம்

## 4. உபரசம் 120

1. காந்தம், 2. அப்பிரகம், 3. துருசு. 4. கல்நார்) 5. பொன் நிமிளை, 6. கருங்கல், 7. செங்கல், 8. சுக்கான் கல், 9. ஈரக் கல், 10. சூடாலைக்கல், 11. கருடக்கல். 12. இராசவர்த்தக்கல், 13 பவழம், 14. வயிடூரியம், 15. பச்சை. 16. நீலம், 17. நாகா வண்டு. 18. கருவண்டு, 19. ஆமை, 20, உவர்மண், 21. கற்–சுவடு, 22. ஒட்டின் தூள், 23. கர்ப்பூரச்சிலை, 24. காவிக்கல், 25. சுத்த மணல், 26. செம்மண், 27. சொன்னபேதி, 28, கல் மதம், 29. வயிரம், 30. முத்து, 31. நீலாஞ்சனக்கல், 32. எறும்பு, 33. மாக்கள், 34. தேக்கல், 35. பூநாகம், 36. இந்திரகோபம், 37. கோமேதகம், 38 புஷ்பராகம். 39. முட்டை, 40. மயில், 41. எறும்பு. 42. நண்டு, 43. நத்தை, 44. மான் கொம்பு, 45. கலைக்கொம்பு, 46. மாட்டுக் கொம்பு, 47. ஆட்டுக்கொம்பு, 48. ஆனைக்கொம்பு, 49. கோழிக்கால், 50. மாட்டுக்கால், 51. குருந் தக்கல், 52. பன்றிக் கொம்பு, 53. அஸ்திபேதி, 54. மஞ்சட்கல், 55. தவளக்கல், 56. மாங்கிசபேதி, 57. சிட்டக்கல், 58. வெள்ளைக் கல், 59. சுக்கான்கல், 60. சிலாவங்கம், 61. செவ்வட்டை; 62, செம்புமண், 63. மீன் எறும்பு, 64. கத்தூரி, 65. தேன், 66. கடல்நுரை, 67. மயிர், 68. கரடி. 69. மாந்தளிர்க் கல், 70. படிகக்கல், 71. தவளை, 72. கடற்பாசி, 73. சாளக்கிராமம், 74. கழுதை வண்டு, 75, நாகப்பச்சை, 76. கருமணல், 77. வங்க மணல், 78. காந்தக்கல், 79. ஏமச்சிலை, 80. ஏமமண், 81. நாக மணல், 82. ஈயமணல், 83. நாய்க்கட்டம், 84. பன்றி முள், 85. எலிமுள், 86. வங்கச்சிலை, 87. நாகச்சிலை, 88. மந்தாரச் சிலை, 89. முட்சங்கு, 90. மாங்கிசச்சிலை, 91. மரகதம், 92. குரு வண்டு, 93. கெண்டசிலை, 94. காகச்சிலை, 95, ஈயச்சிலை, 96. கிர சிதச்சிலை, 97. முத்துச் சிப்பி, 98. பல், 99. உலோக மணல் 100. கிளிஞ்சில், 101. செம்புமலை, 102. உரம், 103. வெண்கல மலை, 104. வனப்பக்கல், 105 வெள்ளி மணல், 106. அயச்சிலைக் கல், 107. திமிங்கலம், 108. பேரோசனை, 109. தராமலை, 110. பித்தளை மலை 111. காண்டாமிருகக் கொம்பு, 112. புற்றும் பழம் 113. குளவிக் கூட்டுமண், 114 நாகச்சட்டை, 115. புரு

வெச்சம், 116. மின்மினிப்பூச்சி, 117. மாணிக்கம், 118. வைகிராந்தம். 119. அன்னபேதி, 120. சாத்திரபேதி என்பவை.

**பஞ்ச பூத உபரசம்:-**

1. **பிருதிவி :–** 1. பூநாகம் 2. இராசவர்த்தம் 3. அப்பிரகம் 4. ஊசிக்காந்தம் 5. சிலாசத்து என்பன.

2. **அப்பு;** 1. நண்டு 2. நத்தை 3. சங்கு 4. முட்டை 5. பொற்கிளிஞ்சல்

3. **தேயு:** 1. வெள்ளைக்கல் 2. இந்திரகோபம் 3. கழுதை வண்டு 4 நிமிளை, 5. எறும்பு.

4. **வாயு:** 1கல்மதம் 2. கல்நார் 3. மயிர் 4. அன்னபேதி, 5. சாத்திரபேதி

5. **ஆகாயம்:** 1. சுக்கான்கல் 2. வை கிராந்தம் 3. கற்சவடு, 4. சாளாக் கிராமம், இரசிதச்சிலை.

**மாரணம்**

வெங்காரம், வெடியுப்பு, வெள்ளை வீரம், பூரம், கந்தி, ரசம், சாரம், இவ்வெட்டுச் சரக்குகள் கூடி உலோகங்களை மாரணம் செய்யக் கூடியவை. ஆதலால் இவற்றிற்கு அஸ்டலோக மாரணச் சரக்குகள் என்று அழைக்கப்படும்.

உலோகத்தை செந்தூரமாக்குவதற்கு அந்த உலோகத்தின் எடைக்கு இவ்வெட்டுச்சரக்கு சமமாய் இருக்க வேண்டும்

பொன்னோ, வெள்ளியோ 1 பலம் எடையென்றால் மேற்சொல்லிய 8 சாக்குகளும் சேர்த்து 1பலம் எடை இருக்க வேண்டும் ($8 \times 1\frac{1}{4}$வராகனெடை $= 10$வராகெனடை அல்லது 1பலம்.)

**உபயோகம் :** அஸ்டலோக சரக்கை 4 பங்காக்கி ஒவ்வொரு பங்கையும் எலுமிச்சம்பழசாறு விட்டு அரைத்து லோகத்திற்கு இரு புறமும் பூசி காயவைத்து லோகத்திற்கு தக்கபடி புடமிட்டு, மறுபடியும் மற்ற பங்குகளையும் பூசி, இவ்வாறே புடமிட்டு, லோக இடைக்கு சமஎடை கந்தகமும், இரண்டும் கூடிய எடைக்கு 4ல் 1பங்கு வீரமுஞ் சேர்த்து அரைத்து சிறு வில்லைகள் செய்து உலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி, சீலை செய்து செந்தூரமாகும் வரை புடமிடவும்.

**ஏகமூலம்**

படிகி, பூநாதம், புழுகு ஷெ எண் சரக்குகளில் சேர்வதற்கு ஏகமூலம் என்று சொல்வதுண்டு. மாரணக் சரக்குகளைக் காட்டிலும் அதிக பலன் தரும், இதில் முடியும் செந்தூரம் மிக வீரியமும் பிணிகளை விரைவில் போக்கக் கூடிய குணமடையும்.

## லோக மாரணம்

வெள்ளீயம் தாளகத்தாலும், காரியம் மனோசிலையாலும், உருக்கு லிங்கத்தாலும், தாம்பிரம் கெந்தியாலும், வெள்ளி ஏமமாஷிகத்தாலும், பொன் நிமிலையாலும் மாளும். மரணச் சரக்கை சம்பீரச் சாற்றாலரைத்து தகட்டிற்குப் பூசி ஒரு சட்டிக்குள் வைத்து மேலே சட்டியை மூடி நன்றாக சீலை செய்து கஜபுடம் இடவும்.

## செய நீர்

ஐந்தாங் காயச்சல் வெடியுப்பு 10 பங்கு, அட்டுப்பு 5 பங்கு, படிகி 5பங்கு, சாரம் 5பங்கு, வெள்ளை 5பங்கு, கெந்தி 3பங்கு, எவட்சாரம் $2\frac{1}{4}$பங்கு, அன்ன பேதி 2பங்கு (ஆக மொத்தம் $37\frac{1}{4}$ பங்கு) கோது நீக்கிய பழம் புளி 15 பங்கு

புளியைத் தவிர தனித்தனியே மற்றவைகளை இடித்து பொடித்து ஒன்று சேர்த்து, புளியுடன் சிறிது சேர்த்து அரைத்து ஒன்று சேரும்படி இரும்பு உலக்கையால் இடித்து பிறகு சிறு சிறு வில்லைகளாக்கி உலர்த்தி புதிய பானையில் வைத்து தென்னை ஓலையிட்டு எரித்து எடுத்து சீலையில் மூடிகட்டி பீங்கான் பாத்திரத்தில் தொங்க விட்டு இப்பாத்திரத்தை பெரிய மரபாத்திரத்தினுள் அமைத்து மேலே மூடி சீலை ஏழு செய்து சதுப்புள்ள பூமியில் புதைத்து, ஒரு மண்டலம் கழித்து எடுத்துப் பார்த்தால் நீர் பீங்கான் பாத்திரத்தில் நீர் படிந்திருக்கும். பனிக்காலத்தில் பீங்கான் தட்டில் ஒருபுறம் பரப்பி பனியில்வைக்க நீரிறங்கும். இந்நீர் நவமணி, நவலோகம், இரசம், உபரசம், உபரசசத்துக்கள் இவற்றைச் செந்தூரமாக்கும் வல்லமை பெறும்.

## அண்ட எருக்கஞ் செயநீர்

எருக்கம்பால் 2 பங்கு, முட்டை வெண்கரு 1 பங்கு வீரம் ஒரு சிட்டிகை இவைகளை ஒரு புட்டியில் வைத்திருந்தால் செய நீர் தோன்றும். இது கடுங்காரபற்பங்கள், சுண்ணங்கள் செய்வதற்கு பயன்படும்.

## சிப்பி செயநீர்

உயிருள்ள கும்பிடு கிளிஞ்சல்களின் வாயை கவனமாக பிளந்து, வெங்காரம், வீரம், பச்சைக் கற்பூரம் சரிபங்கு எடுத்து பொடித்த தூளில் ஒரு சிட்டிகை இட்டு மூடிப் பீங்கான் பாத்திரத்தில் வைத்தால் நீர் இறங்கும். இதுவே சிப்பி செயநீர் எனப்படும். இந்நீரை உலோகபாடாண உபரசங்களுக்கு விட்டரைத்துப் புடமிடச் சுண்ணமாகும்.

## திராவகம்

### செந்தூரத் திராவகம்

அன்னபேதி 85 பலம், வெடியுப்பு 45 பலம், படிகாரப் 20 பலம் பூநீறு 10 பலம். கெந்தி 10 பலம், கறியுப்பு 5 பலம் ஆக மொத்தம் 175 பலம் — தனித்தனியே ஒவ்வொன்றையும் கல்வத்தில் அரைத்து, பிறகு எல்லாவற்றையும் சேர்த்து பனியில் வைக்கவும். மூன்று பங்காகச் செய்து. ஒருபங்கை அடுப்பில் இட்டு திராவக மிறக்கி, இரண்டாம் பங்கில் சேர்த்து வாலையிட்டு திராவக மிறக்கி, பிறகு 3ம் பங்கையும் கூட்டித் திராவக மெடுக்கவும். இது லோகாதி தாதுப் பொருள்களை செந்தூரிக்க உதவும்.

### சங்கத் திராவகம்

வெடியுப்பு 3 பங்கு, இந்துப்பு 1 பங்கு, சோற்றுப்பு 1 பங்கு, நவச்சாரம் $2\frac{1}{2}$ பங்கு, அன்னபேதி $\frac{1}{4}$ பங்கு, துருசு $\frac{1}{4}$ பங்கு, படிகாரம் $\frac{3}{4}$ பங்கு, பூநீறு $\frac{3}{4}$ பங்கு, வெங்காரம் 1 பங்கு — இவைகளை பொடித்து திராவக எந்திரத்திலிட்டு திராவகம் இறக்கி கொள்ளவும். இதனல் உலோகங்களும் உபரசங்களும் நீராகும்.

இதை நீரில் கலந்து துளிக்கணக்கில் கொடுக்க மார்புவலி, வாயு, குன்மவலி நீங்கும் என்பர்.

## மருந்து

அகமருந்து, 32 புறமருந்து 32 என்று இருவகைப்படும் 32 அகமருந்துகளும் அதன் பயன் தரும் காலமும்.

| | | |
|---|---|---|
| சுரசம், சாறு, குடிநீர், கற்கம், உட்களி, அடை | 3 மணி நேரம் வன்மையுள்ளது. | |
| சூரணம், பிட்டு, வடகம், வெண்ணெய் | — மூன்றுதிங்கள் வன்மை உள்ளனவாம் | |
| மணப்பாகு, நெய், ரசாயனம், இளகம் | — ஆறுதிங்கள் | ,, |
| எண்ணை, மாத்திரை, கடுகு, பக்குவம், தேனூறல், தீநீர், | — ஓராண்டு | ,, |
| மெழுகு, குழம்பு | — ஐந்தாண்டுகள் | ,, |
| இரசப்பதங்கம் | — பத்தாண்டு | ,, |
| செந்தூரம் | — 75 ஆண்டு | ,, |
| நீறு, கட்டு, உருக்கு, களங்கு | — 100 ,, | ,, |
| சுண்ணம் | — 500 ,, | ,, |
| கற்பம், சத்து, குருகுளிகை | — அநேக ஆண்டுகள் வன்மை உள்ளாதயிருக்கும் | |

(தொடரும்.)